# சைவ சித்தாந்த சாதனம்.

முதல்நெம்பர் சாதனத்தில், பஞ்சக்கிருத்தியம் எல்லாருக்கும் பொது அதற்குரிய, அக்கினிகாரியம் எல்லாத்துக்கும் பொது. அக்கினி காரிய சுதந்தர முடைய' எரியுருவன்' (முக்கண்ணன்முழுமுதற் கடவுள்) எல்லாருக்கும் பொதுக்காரணமான கடவுள் என்று வெளியிட்டோம். (இது தனியாக வச்சிட்டுப் பிரசுரம் செய்யப்பட்டுள்ளது.)

இரண்டாநெம்பர் சாதனத்தில், மூர்த்தி அதாவது அம்முழுமுதற் கடவுள் (எரியுருவன்) மிருத்துவில் தோன்றும் ஐயையந்து நிலைகள் (மூர்த்தங்கள்) பஞ்சக்கிருத்தியோ பகார விளக்கமென்றும் அவ்வுபகாரம் சீவகோடிகளையுத் தேசித்தேற் பட்டதென்றும் இவ்வை யைந்து சோபான நிலைகள் எல்லாச் சமயத்தாருக்கும் பொது வானவைகளென்பும், இராமநாதபுரம் மஹாசபையில் சென்றவருடம் எழுதி வெளியிட்டோம். (சித்தாந்தத் தேனும் பார்க்கவும்.)

இவ்வையைந்து மூர்த்தர்களையே நஞ்சமயாசாரியர் நால்வரும் வியந்து வியந்து புகழ்ந்து பாடியருளினார்கள். (திருமுறை திருவாசகம் பார்க்க) இப்பொழுது இந்த மஹா திவ்யசபையில் இந்த மூன்றாவது சாதனம்சாதிப்பேன்.

மஹா தேவருடைய (ஹரசிவனுடைய) பஞ்சக்கிருத்தியங்களைக் காட்டும் திருநாமம் இலிங்கம், என்பது தான். சிருட்டித்தல், காத்தல், சங்கரித்தல், என்றும் பொருள்பட உள்ள நந்தல், என்னும் பதத்தாலயைந்த நந்தி, என்னும் திருநாமம் இலிங்கம், எனபதற்கு அடுத்த திருநாமம்.

சங்கரித்தல், 'நித்திய சங்காரம் நீடிளைப்பாற்றுதல்', என்ற - திருமந்திரப்படி யிளைப்பாற்றபுரியும் உபகாரம் விளங்கும் ஹர என்ற திவ்விய திருநாமத்தின் கருத்தேயாகும்.

சிவ, என்னுந் திருநாமம் சகலஜீவர்களுக்கும் பிராணாதாரமான வாயுவாகிய வாசி, என்பது, வாசி, வாசி, எனச்சிவா, என்று மாற சிவயோகசித்தி யுண்டாகும். (சித்தாந்தத்தேன் பார்க்க).

நமவாதை யென்ற நமன் சேட்டை தன்னை நான் என்ற வாசியுயிர் நீக்கிமாறு, உமைமாது பரை வந்து யாவே யென்று கடாட்சிக்க வுயிர்வாசி நீறாய்ச் சிவவாய், உமையூத வாறாறும் நீங்கிப் பறிய வோங்கு சிவாவுன்னடி டனிவோ மென்றே, இமையாத முக்கண்ணாவேக பாதா வினியகங் காதரனே நிற்போம் (சிவானுபவம்.)

மேற்கூறிய இலிங்கம், நந்தி, தவிர மற்ற எந்தச்சிவநாமங்களும், பஞ்சக்கிருத்தியன், என்னுங் கருத்தைக் காட்டுகிறதில்லை. என் விசாரத் திலகப்படவில்லை.

புறச்சமயத்திலே மேற்கூறியபடிக்குப் பஞ்சக்கிருத்தியன் என்னும் பொருளுள்ள திருநாமங்களில்லை. வளங்குகிற முக்கிய புறச்சமயநாமங்கள், அல்லா (Allah) ஜேகோவா. (Jehova) கடவுள் (God) என்பவைகளாம்.

இந்தப் பதங்களைச் சோதித்துப் பார்த்தால் ஒன்றிலாவது பஞ்சக்கிருத்தியன், என்ற அர்த்தமுங்கிடையாது. பஞ்சக்கிருத்தியன், எரியுருவனாயிருந்தா லன்றிப் பஞ்சகிருத்தியங்கள் ஏலாதென்ற கருத்தும், எரியுருவன், என்ற அர்த்தமும் விளங்குகிறதேயில்லை. எந்தவிதத்திலும் விளக்கமில்லை.

(Jehova) 'ஜேஹோவா என்றும் பதத்தைப்பற்றி விசாரிப்போம் Jehova from 'haya' to be i. e. Eternal or self - Existent Being ஜேஹோவா என்னுங் கிறிஸ்து மதப்பேர், ஹாயி, என்னுந் தாது மூலமாய்வந்த பதம். ஹாயி என்றால் இருக்கிறது அதாவது என்றுமுள்ளது நித்தியமானது. என்னும் பொருளுடையதாங் கண்டீர்.

(Allah) அல்லா என்னும் பதத்தைப்பற்றி விசாரிப்போம். சில ஆசிரியர் ali - lah அலிலா - விளங்கத்தக்கவன், the worthy to be adored (by all) என்று பதம் பிரிக்கிறார்கள். சிலசாதுக்கள் 'சத் - சித் - ஆனந்தம் என்னும் பொருள் கொண்டபதம் 'அல்லா, (Allah) என்கிறார்கள். இதுவே, ஒவ்வொன்றும் பரசிவத்தின் ஒவ்வொரு இலட்சணத்தைக் குறித்தே யன்றி பஞ்சக்கிருத்திய விலட்சணங்களை யொருங்கக் காட்டுவதன்று.

(God) கடவுள் என்ற பொதுப் பெயரின் கருத்தை விசாரிப்போம். (Gutha) குதா என்ற டூட்டானிபர் பதம் (teutonic words) ஆரியபதம் (Guda) கூட (secret) இரசியம். அதாவது அறியக் கூடாதது (unknowable) என்ற பொருள் வாய்ந்த தாதுவிலிருந்துண்டான பெயர் என்று கண்டோம். இதுவும் பஞ்சக்கிருத்தியத்தைக் காட்டவில்லை. திரோபவக் கிருத்தியத்தை மாத்திரம் காட்டிநின்றது என்று கூறலாம்.

எல்லாமதங்களும், எல்லா மதமுனிவர்களும், ஞானிகளும் கடவுள் நம்மை (பாசம் படிந்த பசுக்களாகிய நம்மைப்) பாசபந்தத்தினின்று நீக்கி நாம்பக்குவப் படும்படியான பிரபஞ்ச சாதனதைக்கொடுத்து நம்மை மோட்சானந்தத்தில் வைக்கிறார் என்று ஒத்துப் பேசுவதால், பஞ்சக்கிருத்தியன், என்ற திருநாமமாகிய மேற்கூறிய இலிங்கம், என்பது சுருதி, யுக்தி, அனுபவச்சம்ம தமாய் எல்லாப் பதங்களுக்குஞ் சம்மதமான பொதுநாமமாக இருப்பது கண்டீர். ஆனதால் இந்த இலிங்கம், என்னுந் திருநாமத்தை முதன்மையாகக்கொண்ட, இலிங்கோத்தாரம்கூறும், நமது வைதீக சைவசித்தாந்தம் எல்லாமதங்களுக்கும் பொதுவானதாயகமே. (சித்தாந்தத்தேன் - தேனமுது முழுதும் பார்த்தால் நன்கு புலப்படும்.)

'இதுவாகும் அது அல்லது எனும் பிணக்கதின்றி - நீதியினாலிவை யெலாம் ஓரிடத்தே காண நின்றது யாதெருசமயம் அது சமயம் பொருணூல்.'

"விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயஞ்செய்து
எர்வினாற் சொன்னாரேனு மெம்பிராற் கேற்றதாகும்."

"எந்தமதமுஞ் சம்மதமாயியலு மதமா மெம்மதமே!"

என்ற வாக்கியங்களால் சைவத்தின் பொதுத்தன்மையை வலியுறுத்தியது கண்டீர்..

இலிங்கம் பொது. முற்கூ றிய சைவசித்தாந்த சாதனங்களில் இலிங்கம் என்னும் எரியுருவனாகிய நம்ஹரசிவனார் முழு முதற்கடவுள் என்று கண்டோம். மற்ற எலலாத் தெய்வங்களும், ஹரசிவனார் தேவியாகிய மஹாவிஷ்ணுவும் இலிங்கத்தில் அடங்கும்.

ஆனதால்தான் இதிகாசங்களில் அகத்தியர் மூலமாய் இராமர், ஹரசிவனாரிடத்தில் பாசுபதம் பெற்றதும், இராமலிங்கப்பிரதிட்டை செய்ததும், பாரதத்தில் அர்ச்சுனன் தபசும் 'இலிங்கம்'ஆகிய நம் ' எரியுருவன்'தேவர்களுக் கெல்லாம், தெய்வங்களுக்கெல்லாம், சிவயோகிகளுக்கெல்லாம், முனிவர்களுக்கெல்லாம் தேவன், அதாவது'மஹாதேவன்' என்ற சிறப்புப்பெயர் நம் ஹரசிவனாருக்கே யுரித்தானதென்ற கருத்தை வெளிப்படுத்தியது கண்டீர்.'தமிழ்மறை'கூறுகின்றது :

"நூறு கோடி பிரமர்க ணொங்கினார்
ஆறுகோடி நாராயண ரங்கனே
ஏறுகங்கை மணலென்னி லிந்திரர்
ஈறிலாத நல்லீச னொருவனே."

(நாராயணர் என்பது பஞ்சமூர்த்திவிஷ்ணு, மஹாவிஷ்ணு அன்று)

"வாதுசெய்து மயங்குமனத்தரா.
யேது சொல்லு வீராகிலு மேழைகாள்
யாதோர் தேவரெனப் படுவார்க் கெலா
மாதேவனலாற் றேவர் மற்றில்லையே."

"எரிபெருக்குவ ரவ்வெரி யீசன
துருவருக்க மதாவ துணர் கிலார்
அரியயற்கரி யானையயர்த்துப் போய்
நரிவிருதத மதாகுவர் நாடரே."

"அருக்கன் பாதம் வணங்குவரந்தியில்
அருக்கனாவனரனுருவல்லனோ."

ஸ்ரீ திருநாவுக்கரசு நாயனார் சுவாமிகளின் இத்திவ்விய விளக்கங்களினால்' எரியுருவன்'றன்'உருவருக்கம்'அக்கினி, சூரியன், சந்திரன் முதலிய எரியுருவங்களெல்லாமென்று கண்டோம். ஆகவே'எரியுருவன்'என்றால் எல்லாத்

தீவகைகளும் அவன் வடிவமென் ங் கண்டோம். வேறு எந்த தெய்வத்திற்கும் இவ்வகை வடிவம் ஏற்பட்டிருப்பதாக சுருதி வாக்கியமில்லை.

நம் ஹரசிவனாரின் சத்தி கூறாகிய நம்மஹாவிஷ்ணுவுக்குக் கூட இவ்வகை வடிவம் கற்பிக்கப்படவில்லை. ஸ்ரீ சுப்பிரமண்ணியக்கடவுளாகிய திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள்" செயலாடிய தீயாருரு வாகியெழு செல்வன்" என் - ம், அப்பர்சுவாமிகள்" எரியலாலுருவமில்லை" என்றும்,' தீயாருருவு'நமஹா சிவனாருக்கேயுரித்தான தென்று விளக்கியருளக் கண்டீர்.

இவ்வகையான் ஹரசிவனார் பெருமையும் பதித்தன்மையும் விளங்க விளங்கத் திருத் தொண்டர்கள் எல்லாம். "சென்று நாஞ் சிறு தெய்வஞ் சேர்வோ மல்லோம், சிவ பெருமான் திருவடியே சேரப் பெற்றோம்" என்று இரு மாந்து பேரின்ப போதத்தழுந்தியானந்தித்து வருகின்றார்கள். சத்தியம்! சத்தியம்! சிவ! சிவ! சிவ!

ஹர. ஷண்முக முதலியார்.

சித்தாந்தம் - 1912 ழ - மே மீ